# ஜீயர்படி திருவாராதனக்ரமம்

ஸ்ரீவை ணவர்கள் அநுதினமும் எம்பெருமானுக்குச் செய்யவேண்டிய திருவாராதனத்தைப் பற்றி எம்பெருமானார், வங்கிப்புரத்து நம்பி, ஸ்ரீபராசரபட்டர் ஆகியோர் திருவாராதனக்ரம நூல்களை அருளிச்செய்துள்ளனர். அவை அனைத்தும் ஸம்ஸ்க்ருத மொழியில் மிக விரிவாக அமைந்துள்ளன. அவற்றைப் புரிந்து கெண்டு அநுஷ்டிப்பது மிகவும் சிரமமானது என்பதனால், நம் போன்றவர்களிடம் மிகவும் கருணை கொண்டு மணவாளமாமுனிகள் மணிப்ரவாளத்தில் ஒரு திருவாராதனக்ரமத்தை அருளிச்செய்துள்ளார். 'ஜீயர்படி' என்று பிரஸித்தமான அந்த திருவாராதனக் கிரமம் மிகவும் எளிய நடையில் அமைந்துள்ளது.

திருவாராதனம் செய்யும்போது நாம் விண்ணப்பிக்க வேண்டியவைகள் அனைத்தையும் அழகிய தமிழிலேயே மாமுனிகள் அருளிச் செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு ஆஸனத்திலும் 'திருவடிநிலை சாத்தியருளவேணும். ........ ஆஸனத்துக்கு எழுந்தருள வேணும்' என்றும், ஒவ்வொருமுறை அர்க்யம் ஸமர்ப்பிக்கும்போதும் 'அர்க்யம் கண்டருளவேணும்' அல்லது, 'திருக்கைகள் விளக்கியருளவேணும்' என்றும். பாத்யம் ஸமர்ப்பிக்கும்போது 'பாத்யம் கண்டருளவேணும்' அல்லது, 'திருவடி விளக்கியருள வேணும்' என்றும், ஆசமனம் ஸமர்ப்பிக்கும்போது, 'ஆசமனம் கண்டருள வேணும்' அல்லது, 'திருப்பவளம் மாற்றி அருளவேணும்' என்றும், 'திருவொற்றாடை கண்டருள வேணும்' என்றும், 'திருப்போனகம் கண்டருள வேணும்' என்றும் அனைத்து விண்ணப்பங்களையும் தமிழிலேயே அருளியுள்ளது மாமுனிகள் அருளிச்செய்துள்ள திருவாராதனக் கிரமத்தின் தனிச் சிறப்பாகும். அர்க்யம் ஸமர்ப்பிக்கவேண்டும், பாத்யம் ஸமர்ப்பிக்க வேண்டும், ஆசமனம் ஸமர்ப்பிக்க வேண்டும் என்று சுருக்கமாகக் கூறாமால், "அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து 'ஸ்ரீமதே நம: அர்க்யம் கண்டருள வேணும்' என்று விண்ணப்பம் செய்து........" என்று ஒவ்வொருமுறையும் மாமுனிகள் தவறாமல்அருளிச்செய்வதையும், இவ்வாறு ஸமர்ப்பித்தவுடன் சுத்த ஜலத்தில் உத்தரணியை சோதித்துக் கொள்ளவேண்டும் என்பதையும் ஒவ்வொரு முறையும் சோம்பாமல் மாமுனிகள் அருளிச்செய்திருப்பதையும் காணலாம். இவற்றைச் சுருக்கிக் கூறாமல், மீண்டும் மீண்டும் விளக்கமாகவே மாமுனிகள் அருளிச் செய்வது, திருவாராதனத்தை நாம் எவ்வளவு சிரத்தையுடன் செய்ய வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

இந்தத் திருவாராதனக் கிரமம் மிகவும் எளிய நடையிலேயே அமைந்திருந்தாலும்/ மணிப்ரவாளத்தில் அமைந்துள்ளபடியால் தற்காலத்தவர்களுக்குப் பயன்படும்படியாக எளியநடை விளக்கம் ஒன்றை அடியேன் எழுதியுள்ளேன். அந்தந்த இடங்களுக்குப் பொருத்தமாக அநுஸந்திக்க வேண்டியவைகளாக மாமுனிகள் குறிப்பாகக் காட்டியுள்ள சுலோகங்களையும் திவ்யப்ரபந்த பாசுரங்களையும் அவ்விளக்கத்தில் முழுமையாகக் கொடுத்துள்ளேன்.

மாமுனிகள் பரமகருணையுடன் அருளிச்செய்துள்ள திருவாராதனக்ரமத்தை இப்போது அச்சிடுவது அனைவருக்கும் மிகவும் பயன்படும் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. அடியேன் எழுதியுள்ள விளக்கத்தில் குற்றம் குறைகள் இருப்பின் அவற்றைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்.

ஸ்ரீவைஷ்ணவபாதூளி

மண்டயம் அனந்தாண் பிள்ளை

வேங்கடகிருஷ்ணதாஸன்

# திருவாராதனக்ரமச் சுருக்கம்




| |
|---|
| 1. அர்க்ய வட்டில் |
| 2. பாத்ய வட்டில் |
| 3. ஆசமன வட்டில் |
| 4. ஸ்நாநீய வட்டில் |
| 5. சுத்தோதக வட்டில் |
| 6. படிகம் |
| 7. திருமஞ்சனத்தாழி. |

1. காலை எழுந்தவுடன் நித்ய கர்மநுஷ்டானங்களைச் செய்வது.
2. 'துலஸ்யம்ருத' ச்லோகத்தை அநுஸந்தித்து திருத்துழாய் பறிப்பது.
3. வாக்ய குருபரம்பரை, 'கௌஸல்யா ஸுப்ரஜா ராம', 'நாயகனாய்' அநுஸந்தித்து அஸ்த்ரமந்த்ரத்தைச் சொல்லி, மூன்றுதரம் கையைத் தட்டி, கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்குவது.
4. பல்லாண்டு, அடியோமோடும், மாரிமலை, அன்றிவ்வுலகம், சிற்றம் சிறுகாலே, நமோ நமோ, நதா்மநிஷ்டோஸ்மி ஆகியவற்றை அநுஸந்திப்பது.
5. திருப்படுக்கையை உதறிப் படுத்து, 'கூர்மாதீந்' அநுஸந்திப்பது.
6. பாத்திரங்களை ஸித்தப்படுத்துவது. தீர்த்தம் சேர்த்து அபிமந்த்ரிப்பது.
7. உடையவருக்குத் திருவாராதனம் ஸமர்ப்பிப்பது.
   மந்த்ராஸனம்: அர்க்யம்-பாத்யம்-அர்க்யம்-ஆசமனம்-திருவொற்றாடை.
   ஸ்நாநாஸனம்: பாத்யம் - அர்க்யம் - ஆசமனம் - திருவொற்றாடை - திருமுத்து விளக்குதல்-திருநாக்கு வழித்தல்-அர்க்யம்-பாத்யம்-அர்க்யம்-ஆசமனம்-திருவொற்றாடை
   அலங்காராஸனம்: அர்க்யம் - பாத்யம் - அர்க்யம் -ஆசமனம் - திருவொற்றாடை.
8. இதே கிரமத்தில் ஆழ்வார்களுக்கும், நித்யஸூரிகளுக்கும் திருவாராதனம் ஸமர்ப்பிப்பது.
9. இதே கிரமத்தில் எம்பெருமானுக்கும் திருவாராதனம் ஸமர்பிப்பது. 'கந்தத்வாராம்', 'பூசும்சாந்து' ஆகியவைகளை அநுஸந்தித்து, சாத்துப்படி சாத்துவது. ஸ்புரத் கிரீடாங்கத, ஸ்வோசித விவித, மங்குல்தோய், சூட்டுநன்மாலைகள் அநுஸந்திப்பது. 'பரிவதில் ஈசனைப் பாடி' அநுஸந்தித்து தூபம் ஸமர்ப்பித்து, வையந்தகளியா, அன்பேதகளியா, திருக்கண்டேன், வடிக்கோல ஆகியவற்றை அநுஸந்தித்து தீபம் ஸமர்ப்பிப்பது. (பிறகு மந்த்ர புஷ்பம்)
10. திருப்பல்லாண்டு திருப்பாவை ஸேவாகாலம்.
11. போஜ்யாஸநம்: பாத்யம் - அர்க்யம் - ஆசமனம் - திருவொற்றாடை - பானீயம். நாறுநறும்பொழில், இன்று வந்தித்தனையும், பச்சைமாமலைபோல் மேனி, மிக்கானை, அடியேன் மேவி, அன்ன ஸூக்தம், மதுஸூக்தம், யாப்ரீதிர், பிப்ரத் வேணும் ஆகியவை அநுஸந்தித்து எம்பெருமானுக்கு அமுதுசெய்யப் பண்ணுவது. பானீயம் கண்டருளப் பண்ணுவது. பிராட்டிமார்களுக்கு அமுதுசெய்யப் பண்ணுவது. அர்க்யம் - பாத்யம் - அர்க்யம் - ஆசமனம்.
12. நித்ய ஸூரிகளுக்கும், ஆழ்வார்களுக்கும், உடையவருக்கும், ஆசாரியனுக்கும் அமுதுசெய்யப் பண்ணுவது.
13. மந்த்ராஸநம்: அர்க்யம் - பாத்யம் - அர்க்யம் - ஆசமனம் - திருவொற்றாடை. 'கனஸார' அநுஸந்தித்து, சுருளமுது கண்டருளப் பண்ணுவது. அர்க்யம் - ஆசமனம் - திருவொற்றாடை.
14. கற்பூர நீராஜனம், லக்ஷ்மீசரண முதலிய சுலோகங்கள், திருப்பாவை சாற்றுமுறை.
15. பர்யங்காஸநம்: பாத்யம் - அர்க்யம் - ஆசமனம் -திருவொற்றாடை - சுருளமுது - அர்க்யம்- ஆசமனம்.
16. உபசாராபதேசேந, பந்நகாதீச பர்யங்கே, அரவத்தமளியினோடும், உறகலுலகல் அநுஸந்தித்துத் திருக்காப்பு சேர்ப்பது தண்டன் ஸமர்ப்பித்து ஜிதந்தே ஸ்தோத்ரம் அநுஸந்திப்பது.

# மணவாளமாமுனிகள் அருளிச்செய்த திருவாராதனக்ரமம்

**விடிவோறே எழுந்திருந்து, தந்ததாவந பூர்வகமாக ஸ்நாநாதி நித்ய கர்மாநுஷ்டானங்களைப் பண்ணிக்கொண்டு, திருத்துழாய் வனத்துக்குப் போய், 'துலஸ்யம்ருத ஜந்மாஸி' என்கிற ச்லோகங்களை அநுஸந்தித்து சதுர்தளமாயிருக்கிற திருத்துழாய்க் கொழுந்துகளையும் புஷ்பங்களையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து, பரிசுத்த ஸ்த்தலத்திலே வைத்து, காலையும் கையையும் நன்றாகச் சோதித்து, ஆசமநம் பண்ணி, ஸந்நிதி முன்பே சென்று குருபரம்பராநுஸந்தாந பூர்வகமாய் தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே சென்று, *கௌஸல்யாஸுப்ரஜாராம* என்கிற ச்லோகத்தையும், *நாயகனாய்* என்கிற பாசுரத்தையும் அநுஸந்தித்து,**

---

**எளிய நடை விளக்கம்**

விடியற்காலையில் எழுந்திருந்து பல்தேய்த்தல் முதற்கொண்டு நீராடுதல் முதலிய அன்றாட கருமங்களை முடித்துக்கொண்டு திருத்துழாய்ச் செடியிருக்குமிடத்திற்குச் சென்று,

''துலஸ்யம்ருத ஜந்மாஸி ஸதா த்வம் கேசவப்ரியே,
கேசவார்த்தம் லுநாமி த்வாம் வரதாபவ சோபநே,
மோக்ஷைக ஹேதோர் தரணி ப்ரஸூதே விஷ்ணோஸ்ஸமஸ்தஸ்ய ஜகத் ப்ரஸூதே:
ஆராதநார்த்தம் புருஷோத்தமஸ்ய லுநாமி பத்ரம் துலஸீ க்ஷமஸ்வ''

என்று அநுஸந்தித்துக் கொண்டே நான்கு இதழ்களோடு கூடிய திருத்துழா கொழுந்துகளையும் பூக்களையும் பறித்து எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து, பரிசுத்தமான இடத்தில் அவற்றை வைக்கவேண்டும். காலையும் கையையும் நன்றாகக் கழுவி சுத்தி செய்துகொண்டு, ஆசமனம் செய்து, பிறகு எம்பெருமான் எழுந்தருளியுள்ள ஸன்னிதி (அல்லது கோயிலாழ்வார்) முன்னே சென்று குருபரம்பரையை அநுஸந்தித்து (அதாவது: அஸ்மத் குருப்யோ நம:, அஸ்மத் பரம குருப்யோ நம:, அஸ்மத் ஸர்வகுருப்யோ நம:, ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, ஸ்ரீபராங்குசதாஸாய நம:, ஸ்ரீமத் யாமுந முநயே நம:, ஸ்ரீராம மிச்ராய நம:, ஸ்ரீ புண்டரீகாக்ஷாய நம:, ஸ்ரீமந் நாதமுநயே நம:, ஸ்ரீமதே சடகோபாய நம:, ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:, ச்ரியை நம:, ஸ்ரீதராய நம: என்று கூறி) தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு

''கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே,
உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாந்நிகம்.'' என்ற சுலோகத்தையும்,

''நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே கொடித்தோன்றும் தோரண
வாசல் காப்பானே மணிக்கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமியரோமுக்கு அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதேயம்மா நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோர் எம்பாவாய்'' என்ற திருப்பாவைப் பாசுரத்தையும்

**அஸ்த்ரமந்த்ரத்தாலே மூன்று விசை கையைத் தட்டி, கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்கி, *பல்லாண்டு பல்லாண்டு*, *அடியோமோடும்*, *மாரிமலைமுழஞ்சில்*, *அன்றிவ்வுலகம் அளந்தாய்*, *சிற்றம்சிறுகாலே* என்கிற பாசுரங்களையும், *நமோ**

---

அனுஸந்தித்து. ''ஓம் ஸஹஸ்ரோல்காய ஸ்வாஹா வீர்யாய அஸ்த்ராய பட்'' என்ற அஸ்த்ர மந்த்ரத்தைச் சொல்லி மூன்று தரம் கையைத் தட்டிக் கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கிப் பிறகு.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு.

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே.

மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டுப்
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா உன்
கோயில்நின்றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்காசனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோரெம்பாவாய்.

அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி
பொன்றச் சகடமுதைத்தாய்புகழ்போற்றி
கன்றுகுணிலாவெறிந்தாய் கழல்போற்றி
வென்றுபகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றுன்சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்று யாம்வந்தோம் இரங்கேலோரெம்பாவாய்.

சிற்றம்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்
பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வானன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். என்கிற பாசுரங்களையும்.

நமோ நமோ வாங்மநஸாதி பூமயே. நமோ நமோ வாங்மநஸைக பூமயே
நமோ நமோ அநந்த மஹா விபூதயே நமோ நமோ அநந்த தயைக ஸிந்தவே

நமோ வாங்மநஸாதி பூமயே*, *நதர்ம நிஷ்டோஸ்மி* என்கிற ச்லோகங்களையும் அநுஸந்தித்து, தீர்த்த எம்பெருமான்களை வெளியிலே எழுந்தருளப்பண்ணி, திருப்படுக்கையை உதறிப் படுத்து, மீளவும் தீர்த்த எம்பெருமான்களை எழுந்தருளப்பண்ணி, எம்பெருமானுக்கு வலது பார்ச்வத்தில் அஞ்சலிஹஸ்தனாய், *கூர்மாதீந் திவ்யலோகாந்* என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்து, ''ஸ்ரீமதே நாராயணாய நம:, ஸ்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம:, நீம் நீளாயை நம:, ஸமஸ்தபரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம:, கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான நூற்றெட்டு திருப்பதியெம்பெருமான்களும் நித்யஸூரிகளோடே ஸாந்நித்யம் செய்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பிப்பது.

தனக்கு இடது பார்ச்வத்திலே திருமஞ்சனத்தாழியை வைத்து, அதில் திருமஞ்சனத்தைப் பூரித்து ஏலக்காப்பும் சாத்துப்படியும் திருத்துழாய்க்கொழுந்தும் பரிமாறி, ஒரு திருத்துழாய்க் கொழுந்தை வலது கையிலே இடுக்கிக் கொண்டு, திருமஞ்சனத் தாழியை ஸ்பர்சித்துக் கொண்டு த்வயத்தாலே ஏழுருவாதல், அஞ்சுருவாதல், அபிமந்த்ரித்து, எம்பெருமானுடைய திருமுன்பே பாத்ரவேதிகை யிலே அர்க்ய, பாத்ய, ஆசமன, ஸ்நாநீயார்த்தமாகவும், மத்யே சுத்த ஜலார்த்தமாகவும்

---

''நதர்ம நிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் த்வத் சரணார விந்தே
அகிஞ்சந: அநந்ய கதி: சரண்ய, த்வத் பாதமூலம் சரணம் ப்ரபத்யே''

என்ற சுலோகங்களையும் அநுஸந்திக்க வேண்டும். பிறகு, தீர்த்த எம்பெருமான்களை (ஸாளக்ராம எம்பெருமான்களை) கோயிலாழ்வாருக்கு வெளியே எழுந்தருளப்பண்ணி, பெருமாளுடைய திருப்படுக்கையை உதறி, (உள்ளே உள்ள பழைய புஷ்பங்களை நீக்கி)ப் படுத்து, மறுபடியும் தீர்த்த எம்பெருமான்களை கோயிலாழ்வாருக்குள் எழுந்தருளப் பண்ண வேண்டும். பிறகு எம்பெருமானுக்கு வலது புறத்தில் கையைக் கூப்பிக் கொண்டு நின்று,

கூர்மாதீந் திவ்ய லோகாந் ததநு மணிமயம் மண்டபம் தத்ரசேஷம்,
தஸ்மிந் தர்மாதிபீடம் தது பரி கமலம் சாமரக்ராஹிணீச்ச,
விஷ்ணும் தேவீர் விபூஷாயுத கணமுரகம் பாதுகே வைநதேயம்,
ஸேநேசம் த்வாரபாலாந் குமுதகணாந் விஷ்ணுபக்தாந் ப்ரபத்யே

என்கிற சுலோகத்தை அனுஸந்திக்க வேண்டும். பிறகு, ''ஸ்ரீமதே நாராயணாய நம:, ஸ்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம:, நீம் நீளாயை நம:, ஸமஸ்த பரிவாராய ஸர்வ மங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம:, கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலாக நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களும் நித்யஸூரிகளோடு கூட ஸாந்நித்யம் செய்தருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, எம்பெருமானுடைய திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பிக்க வேண்டும்.

தனக்கு இடது பக்கத்தில் ஒரு திருமஞ்சனத்தாழியை (பாத்திரத்தை) வைத்து, அதில் தீர்த்தத்தை நிறைத்து அதில் ஏலக்காய், பரிமளம், திருத்துழாய் இவைகளைச் சேர்த்து, ஒரு திருத்துழாய்க் கொழுந்தை வலது கையின் ஆள்காட்டிவிரலுக்கும் நடுவிரலுக்கும் இடையில் இடுக்கிக்கொண்டு, திருமஞ்சனத்தாழியை தொட்டுக்கொண்டு ''ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்று ஏழு அல்லது ஐந்து முறை அனுஸந்திக்க வேண்டும். பிறகு பெருமாளுக்குத் திருமுன்பே ஒரு தட்டில் ஐந்து வட்டில்களை

பஞ்ச பாத்ரங்களையும் ஸ்தாபித்து, திருமஞ்சனத்தாழியில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து பஞ்ச பாத்திரங்களிலேயும் துளித்துளித்து, உத்தர வாக்கியத்தாலே பாத்திரங்களைச் சோதித்து, திருமஞ்சனத்தைப் பூரித்துத் திருத்துழாய்க் கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி ஒரு திருத்துழாய்க் கொழுந்தை விரலிலே இடுக்கிக் கொண்டு பஞ்சபாத்ரங்களையும் ஸ்பர்சித்து, உத்தர வாக்யத்தாலே அபிமந்த்ரித்து, அர்க்ய பாத்ரமொழிந்த பாத்யாதி நான்கு பாத்ரங்கள் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து அர்க்ய பாத்ரத்திலே சேர்த்து அதில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, சாத்துப்படியையும் திருத்துழாயக் கொழுந்தையும் பரிமாறி, உத்தரணியை எடுத்து, கையிலே வைத்து வலதுகையாலே மூடிக்கொண்டு ''ஸ்ரீமதே நாராயணாய நம:, ஸ்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம:, நீம் நீளாயை நம:, ஸமஸ்தபரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம:, விரஜா தீர்த்தமாகவாதல், திருக்காவேரீ தீர்த்தமாகவாதல் திருவுள்ளம் பற்றியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, உத்தரணி தீர்த்தத்தை திருமஞ்சனத் தாழியிலும், பஞ்சபாத்ரங்களிலேயும் துளித்துளி சேர்த்து, சேஷித்த தீர்த்தத்திலே திருத்துழாய்க் கொழுந்தைத் தோய்த்து, தன்னையும் யாகபூமியையும் உத்தரவாக்யத்தாலே ப்ரோக்ஷித்து, சேஷித்த தீர்த்தத்தை திருப்படிகத்தில் சேர்த்து, ஆசார்யன் திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, திருவடி விளக்கி, மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து, பூர்வம் போலே திருமஞ்சனத்தைப் பூரித்து

---

வைக்க வேண்டும். 1. அர்க்யம். (எம்பெருமானுடைய திருக்கையை அலம்புவதற்காக) 2. பாத்யம் (திருவடி அலம்புவதற்காக), 3. ஆசமநீயம் (திருப்பவளம் சோதிப்பதற்காக) 4. ஸ்நாநீயம் (நீராட்டத்திற்கு) என்று நான்கு புறம் நான்கு வட்டிலும் நடுவில் சுத்த தீர்த்தத்திற்காக ஒரு வட்டிலும் வைக்க வேண்டும். திருமஞ்சனத் தாழியிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து ஐந்து வட்டில்களிலும் துளித்துளி சேர்த்து 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்று சொல்லி அவ்வட்டில்களை சுத்திசெய்ய வேண்டும். (பிறகு அவ்வட்டில்களிலுள்ள தீர்த்தத்தை வெளியே சேர்த்துவிட வேண்டும்) பிறகு அவ்வட்டில்களில் தீர்த்தத்தை நிறைத்து, திருத்துழாய்க் கொழுந்தையும், பரிமளத்தையும் சேர்த்து, முன்போல் ஒரு திருத்துழாய்க் கொழுந்தை வலது கையில் இடுக்கிக் கொண்டு, ஐந்து வட்டில்களையும் கையால் ஸ்பர்சித்துக் (தொட்டுக்) கொண்டு, 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்று அனுஸந்திக்க வேண்டும். பிறகு அர்க்ய வட்டில் தவிர மற்ற நான்கு வட்டில்களிலிருந்தும் ஒவ்வோர் உத்தரணி தீர்த்தத்தை எடுத்து அர்க்ய வட்டிலில் சேர்க்கவேண்டும். பிறகு அர்க்ய வட்டிலிலிருந்து ஓர் உத்தரணி தீர்த்தத்தை எடுத்து பரிமளத்தையும் திருத்துழாக் கொழுந்தையும் அதில் சேர்த்து, உத்தரணியை யெடுத்து வலது கையால் மூடிக்கொண்டு (தன் மூக்கு அளவு உயரத்தில் வைத்துக் கொண்டு) ''ஸ்ரீமதே நாராயணாய நம:, ஸ்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம:, நீம் நீளாயை நம:, ஸமஸ்தபரிவாராய ஸர்வமங்களவிக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம:, விரஜாதீர்த்தமாகவாதல் திருக்காவேரீ தீர்த்தமாகவாதல் திருவுள்ளம் பற்றியருளவேணும்'' என்று விண்ணப்பித்து, உத்தரணியில் உள்ள தீர்த்தத்தை திருமஞ்சனத் தாழியிலும், ஐந்து வட்டில்களிலும் துளித்துளி சேர்த்து, மிகுந்த தீர்த்தத்தாலே திருத்துழாய்க் கொழுந்தை நனைத்து, தன்னையும் திருவாராதனம் செய்யுமிடத்தையும் ''ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்று சொல்லி ப்ரோக்ஷித்து, மிகுந்த தீர்த்தத்தை திருப்படிகத்தில் சேர்த்துவிடவேண்டும். ஆசார்யன் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, திருவடி விளக்க வேண்டும். (பிறகு ஐந்து வட்டில்களிலும் உள்ள தீர்த்தத்தை வெளியே

அபிமந்த்ரித்து சோஷித்து, உடையவர் திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, திருவடி நிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருளவேணும். ஆசார்யன் திருக்கையாலே திருவாராதனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, அர்க்யம் கண்டருளவேணும்'' என்று வலது திருக்கையிலே ஸமர்ப்பித்து, கண்டருளினதாக பாவித்து, மூன்று உத்தரணி தீர்த்தத்தைத் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''பாத்யம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முன்று விசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று மூன்று விசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து மூன்று விசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த

---

சேர்த்துவிட வேண்டும்.) மீண்டும் முன்பு போலவே திருமஞ்சனத் தாழியிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து ஐந்து வட்டில்களிலும் துளித்துளி சேர்த்து 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்று சொல்லி அவ்வட்டில்களை சுத்திசெய்து ஐந்து வட்டில்களிலும் தீர்த்தத்தை நிறைத்துக் கொள்ளவேண்டும். பிறகு உடையவர் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, திருவடி நிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருளவேணும். ஆசார்யன் திருக்கையாலே திருவாராதனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பிக்க வேண்டும். அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: அர்க்யம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பித்து, உடையவருடைய வலது திருக்கரத்தின் அருகில் உத்தரணியைக் கொண்டு சென்று, அவர் அர்க்யம் கண்டருளினதாக பாவித்து, தீர்த்தத்தைத் திருப்படிகத்திலே சேர்த்துவிடவேண்டும். இதேபோல் மூன்று முறை செய்ய வேண்டும். (இப்படிச் செய்வது அர்க்யம் ஸமர்ப்பித்தல் எனப்படும்.) பிறகு, உத்தரணியால் நடுவில் இருக்கும் சுத்தோதக வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து திருப்படிகத்தில் சேர்க்க வேண்டும். (இது உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதிப்பது எனப்படும்) பிறகு பாத்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம: பாத்யம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பித்து, உத்தரணியை உடையவருடைய திருவடிகளின் அருகில் கொண்டு சென்று, அவர் பாத்யம் கண்டருளினதாக பாவித்து, தீர்த்தத்தைத் திருப்படிகத்திலே சேர்த்துவிடவேண்டும். இதேபோல் மூன்று முறை செய்ய வேண்டும். (இப்படிச் செய்வது பாத்யம் ஸமர்ப்பித்தல் எனப்படும்) பிறகு, உத்தரணியால் நடுவில் இருக்கும் சுத்தோதக வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து திருப்படிகத்தில் சேர்க்க வேண்டும். பிறகு அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பித்து முன்பு போலவே அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதித்து, பிறகு ஆசமன வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, ஆசமனம் கண்டருவேணும்'' என்று விண்ணப்பித்து உடையவருடைய திருப்பவளம் அருகில் உத்தரணியைக் கொண்டு சென்று, ஆசமனீயம் ஸமர்ப்பித்ததாக பாவித்து தீர்த்தத்தை திருப்படிகத்தில் சேர்த்துவிட

ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப் பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடி களுக்குத் திருவொற்றாடை சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து,

திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடி நிலை சாத்தியருளவேணும். ஸ்நாநஸநத்துக்கு எழுந்தருளவேணும்.'' என்று விண்ணப்பம் செய்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஸ்ரீமதே, திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முன்று விசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, மூன்றுவிசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணிய்ெ சுத்தஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, மூன்றுவிசை திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று

---

வேண்டும். இதேபோல் மூன்று முறை செய்ய வேண்டும். (இது ஆசமனம் ஸமர்ப்பித்தல் எனப்படும்.) பிறகு உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதித்து அந்த வட்டிலிலிலேயே உத்தரணியை வைக்க வேண்டும். பிறகு. திருவொற்றாடைக்கு என்று தனியாக வைத்திருக்கும் ஒரு துணியை எடுத்து அதன் ஒரு நுனியால் ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றுவாடை ஸமர்ப்பித்து (கைகளையும் வாயையும் துடைப்பதாக பாவித்து). பிறகு தலைமாறி (அதாவது துணியைத் திருப்பி அதன் மற்றொரு நுனியால்) ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று திருவடிகளுக்குத் திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும். (திருவடிகளைத் துடைப்பதாக பாவித்து)(ஆக மந்த்ராஸனத்தில் முதலில் அர்க்யம், பிறகு பாத்யம். மீண்டும் அர்க்யம், பிறகு ஆசமனீயம். அதற்குப் பிறகு திருவொற்றுவாடை ஸமர்ப்பிக்கவேண்டும்.)

ஒரு திருத்துழாக் கொழுந்தை உடையவர் திருவடிகளில் ஸமர்ப்பித்து. ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். ஸ்நாநாஸநத்துக்கு எழுந்தருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து பாத்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து. ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து. மூன்று முறை பாத்யம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதித்து. அர்க்ய வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து. '''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து. மூன்று முறை அர்க்யம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு உத்ரணியை சுத்தோதக வட்டிலில் சோதித்து. ஆசமன வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து மூன்று முறை ஆசமனம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதிக்க வேண்டும். பிறகு ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தி யருளவேணும்'' என்று விண்ணப்பித்து ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப் பவளத்திற்கும் திருவொற்றாடை ஸமர்ப்பித்து. தலைமாறி. ''திருவடிகளுக்குத் திருவொற்றுவாடை

விண்ணப்பம் செய்து, திருத்துழாய்க் கொழுந்தாலே திருமுத்து விளக்கித் திருப்படிகத்திலே பொகட்டு, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்துக் கையைச் சோதித்து, மற்றொரு கொழுந்தாலே திருநாக்கு வழித்துத் திருப்படிகத்திலே பொகட்டு, கையைச் சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை எடுத்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருப்பவளம் மாற்றி யருளவேணும். திருக்கைகள் விளக்கியருள வேணும். திருமுக மண்டலம் விளக்கி யருளவேணும். திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். திருமஞ்சன

---

சாத்தி யருளவேணும்'' என்று விண்ணப்பித்து திருவடிகளுக்குத் திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும். (ஸ்நாநாஸனத்தில் முதலில் பாத்யம், பிறகு அர்க்யம், அதற்குப் பிறகு ஆசமநீயம், பிறகு திருவொற்றாடை ஸமர்ப்பிக்கவேண்டும்.) பிறகு ஒரு திருத்துழாய்க் கொழுந்தை எடுத்துத் திருமுத்து விளக்கி, (பல் விளக்குவதாக பாவித்து), அத்திருத்துழாயைப் படிகத்திலே சேர்த்து விட வேண்டும். அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து கையைக் கழுவிக் கொண்டு, மற்றொரு திருத்துழாய்க் கொழுந்தை எடுத்து திருநாக்கு வழிப்பதாக பாவித்து, திருப்படிகத்திலே சேர்த்துவிடவேண்டும். மீண்டும் அர்க்ய வட்டிலிலிருந்து தீர்த்தமெடுத்துக் கையைக் கழுவிக்கொண்டு, அர்க்ய வட்டிலிருந்து தீர்த்தமெடுத்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருக்கைகள் விளக்கியருளவேணும், திருப்பவளம் மாற்றியருளவேணும், திருக்கைகள் விளக்கி அருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியருளவேணும், திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பித்து, மும்மூன்று முறை உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து திருப்படிகத்திலே சேர்க்கவேண்டும். பிறகு சுத்தோதக வட்டிலில் உத்தரணியை சோதித்து, பாத்ய வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து, ''திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பித்து மூன்று முறை பாத்யம் ஸமர்ப்பிக்க வேண்டும். உத்தரணியை சுத்தோதக வட்டிலில் சோதித்து, பிறகு, ஆசமன வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து ஆசமனீயம் ஸமர்ப்பிக்க வேண்டும். உத்தரணியை சுத்தோகத்தில் சோதித்து, அந்த வட்டிலிலேயே உத்தரணியை வைத்து விடவேண்டும். பிறகு, ''திருவொற்றாடை சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பித்து, வஸ்த்ரத்தின் ஒரு நுனியால் திருக்கைகளுக்கும் திருமுகமண்டலத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும். (ஆக, அர்க்யம், பாத்யம், ஆசமநீயம், திருவொற்றாடை என்ற முறையில் ஸமர்ப்பிக்க வேண்டும்.) ஒரு திருத்துழாய்க் கொழுந்தைத் திருவடிகளில் ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமானுஜாய நம: திருவடிநிலை சாத்தியருள

சாத்தியருளவேணும். திருமஞ்சன வேதிகையில் எழுந்தருளவேணும். ஒலியல் சாத்தியருளவேணும். எண்ணெய்க்காப்பு சாத்தியருளவேணும். திருமுடிக்காப்புக்காக நெல்லிக்காப்பு சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, ஸ்நாநீய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருமஞ்சனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, த்யானித்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்தஜலத்திலே சோதித்து, ஆசமனீய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனீயம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருமுடி திருமேனியெங்கு மொக்கத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து,

திருத்துழாய்க் கொழுந்தைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். அலங்காராஸநத்துக்கு எழுந்தருள வேணும். திருப்பரியட்டம் சாத்தியருள வேணும். திருவுத்தரீயம் சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஸ்ரீமதே அர்க்யம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து,

---

வேணும். திருமஞ்சன வேதிகையில் எழுந்தருளவேணும். ஒலியல் சாத்தியருளவேணும். எண்ணெய்க்காப்பு சாத்தியருளவேணும். திருமுடிக்காப்புக்காக நெல்லிக்காப்பு சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பிக்க வேண்டும். ஸ்நாநீய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தமெடுத்து ''திருமஞ்சனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து, திருமஞ்சனம் செய்வதாக த்யானித்து, மூன்று முறை படிகத்தில் சேர்க்க வேண்டும். பிறகு உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து ஆசமநீயம் ஸமர்ப்பிக்க வேண்டும். சுத்தஜலத்தில் உத்தரணியை சோதித்து அந்த வட்டிலிலேயே வைக்க வேண்டும். பிறகு ''திருவொற்றாடை திருமுடி திருமேனி யெங்குமொக்கச் சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பித்து வஸ்த்ரத்தின் ஒரு நுனியால் திருமுடி தொடங்கி திருமேனி முழுவதிலும், மற்றொரு நுனியால் ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பித்து, திருவடிகளிலும் திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும். (ஆக ஸ்நாநீயம் - ஆசமனம் - திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும்.)

திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளில் ஸமர்ப்பித்து ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். அலங்காரஸனத்துக்கு எழுந்தருளவேணும். திருப்பரியட்டம் சாத்தியருளவேணும். திருவுத்தரீயம் சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பித்து, ''அர்க்யம் கண்டருளவேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில்

திருமஞ்சனத்தை எடுத்து, ''திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப் படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற் கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருமண்காப்பு சாத்தியருளவேணும். ஸ்ரீசூர்ணக்காப்பு சாத்தியருள வேணும். திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும். திருப்படித்தாமம் சாத்தியருளவேணும். சாத்துப்படி சாத்தியருளவேணும். திருவாபரணம் சாத்தியருள வேணும். ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங் களையும் கண்டருள வேணும்'' என்று திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பிப்பது.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து பூர்வம் போலே திருமஞ்சனத்தைப் பூரித்து சோஷித்து, ''ஸ்ரீமத்ப்ய: பராங்குச பரகாலாதிப்யோ நம:'' என்று திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, உடையவர்க்கு ஸமர்ப்பித்தது போலவே திருவாராதனம் பண்ணுகிறது.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து, திருமஞ்சனத்தைப் பூரித்து, அபிமந்த்ரித்து, சோஷித்து, ''ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம: அநந்தாய நாகராஜாய நம:

---

சோதித்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று மீண்டும் அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு, ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருமண்காப்பு சாத்தியருளவேணும். ஸ்ரீசூர்ணக்காப்பு சாத்தியருளவேணும். திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும். திருப்படித்தாமம் சாத்திபருள வேணும். சாத்துப்படி சாத்தியருளவேணும். திருவாபரணம் சாத்தியருளவேணும். ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங்களையும் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பித்து திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளில் ஸமர்ப்பிக்கவேண்டும்.

ஐந்து வடடில்களிலும் உள்ள தீர்த்தத்தை படிகத்தில் சேர்த்துவிட்டு, மீண்டும் வட்டில்களை முன் போலவே சோதித்து, தீர்த்தம் நிறைத்து, அபிமந்த்ரித்து, ''ஸ்ரீமத்ப்ய: பராங்குச பரகாலாதிப்யோ நம:'' என்று விண்ணப்பித்து, ஆழ்வார்கள் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, உடையவருக்குத் திருவாராதனம் செய்தது போலவே ஆழ்வார்களுக்குத் திருவாராதனம் செய்ய வேண்டும்.

மீண்டும் வுட்டில்களில் உள்ள தீர்த்தத்தை படிகத்தில் சேர்த்துவிட்டு, வட்டில்களை முன்போலவே சோதித்துத் தீர்த்தம் நிறைத்து, அபிமந்த்ரித்து, ''ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:

வைநதேயாய பக்ஷிராஜாய நம: ஸுதர்சனாய ஹேதிராஜாய நம: பாஞ்சஜந்யாய சங்காதிபதயே நம:'' என்று திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, பூர்வம் போலே திருவாராதனம் பண்ணுகிறது.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்துத் திருமஞ்சனத்தைப் பூரித்து, திருத்துழாய்க் கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி உத்தரவாக்யத்தாலே அபிமந்த்ரித்து, எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நாராயணாய நம:, ஸ்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம:, நீம் நீளாயை நம:, ஸமஸ்தபரியவாராய ஸர்வமங்களவிக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம:, திருவடிநிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருள வேணும். ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஸ்ரீமதே நம: அர்க்யம் கண்டருளவேணும்'' என்று, எம்பெருமான் வலது திருக்கைகளிலே ஸமர்ப்பித்து, கண்டருளினதாக பாவித்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''பாத்யம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்தஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி,

---

அநந்தாய நாகராஜாய நம: வைநதேயாய பக்ஷிராஜாய நம: ஸுதர்சநாய ஹேதிராஜாய நம: பாஞ்சஜந்யாய சங்காதிபதயே நம:'' என்று விண்ணப்பித்து, நித்யஸூரிகள் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, முன்பு போலவே திருவாராதனம் செய்ய வேண்டும்.

மீண்டும் வட்டில்களில் உள்ள தீர்த்தத்தை படிகத்தில் சேர்த்துவிட்டு, வட்டில்களை முன்புபோலவே சோதித்து, தீர்த்தம் நிறைத்து, ''ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்ற உத்தரவாக்கியத்தைச் சொல்லி தீர்த்தத்தை அபிமந்த்ரித்து, எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நாராயணாய நம: ஸ்ரீம் ச்ரியை நம: பூம் பூம்யை நம: நீம் நீளாயை நம: ஸமஸ்தபரிவாராய ஸர்வ மங்களவிக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருளவேணும். ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய வட்டிலிலிருந்து தீர்த்தத்தை உத்தரணியால் எடுத்து, ''அர்க்யம் கண்டருளவேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,, ''பாத்யம் கண்டருளவேணும்'' என்று பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,, ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று ஆசமன்ம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,, ''திருவொற்றாடை

''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து மீளவும் எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து,

''ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருள வேணும். ஸ்நாநாஸநத்துக்கு எழுந்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஸ்ரீமதே நம: திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து ஒரு திருத்துழாய்க் கொழுந்தாலே திருமுத்து விளக்கித் திருப்படிகத்திலே சேர்த்து, கையை சோதித்து, மற்றொரு கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிகத்திலே சேர்த்து, கையை சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஸ்ரீமதே நம: திருப்பவளம் மாற்றி யருள வேணும். திருக்கைகள் விளக்கியருள வேணும். திருமுக மண்டலம் விளக்கியருள வேணும். திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால்

---

சாத்தியருளவேணும்'' என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

மீண்டும் எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருளவேணும். ஸ்நாநாஸனத்திற்கு எழுந்தருளவேணும்.'' என்று விண்ணப்பம் செய்து, பாத்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு, ''ஸ்ரீமதே நம: திருவடி விளக்கியருளவேணும்'' என்று மூன்று முறை பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,, ''திருக்கைகள் விளக்கி யருளவேணும்'' என்று விண்ணப்பித்து, மூன்று முறை அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து மூன்று முறை ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,, ''திருவொற்றாடை சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஒரு திருத்துழாய்க் கொழுந்தால் திருமுத்து (பல்) விளக்கி, அத்திருத்துழாயைப் படிகத்தில் சேர்த்துவிடவேண்டும். சுத்தஜலத்தால் கையை சுத்தம் செய்து கொண்டு, மற்றொரு திருத்துழாய்க் கொழுந்தால் எம்பெருமானுக்கு நாக்கு வழித்து, அத்திருத்துழாயைப் படிகத்தில் சேர்த்துவிட வேண்டும். கையை சோதித்துக்கொண்டு, அர்க்ய வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு, ''ஸ்ரீமதே நம: திருப்பவளம் மாற்றியருளவேணும். திருக்கைகள் விளக்கியருளவேணும். திருமுகமண்டலம் விளக்கியருளவேணும். திருக்கைகள்

செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருமுகமண்டலத்துக்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து,

திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். திருமஞ்சனவேதிகைக்கு எழுந்தருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து தீர்த்த எம்பெருமான்களை வேதிகையிலே எழுந்தருளப்பண்ணி, சுருளமுது சோதித்துக் கண்டருளப் பண்ணி, திருவொற்றாடை சாத்தி, ''ஸ்ரீமதே நம: எண்ணெய் ஒலியல் சாத்தியருளவேணும். எண்ணெய்க்காப்பு சாத்தியருளவேணும். திருமுடிக்காப்புக்காக சாத்துப்படி சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, ஸ்நாநீய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், *வெண்ணெயளைந்த குணுங்கும்* இத்யாதி அநுஸந்தானத்துடனே தீர்த்த

---

விளக்கியருளவேணும்'' என்று மூன்று முறை ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பித்து மூன்று முறை பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று மீண்டும் அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று ஆசமனமும், ''திருவொற்றாடை சாத்தியருளவேணும்'' என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். திருமஞ்சனவேதிகைக்கு எழுந்தருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, தீர்த்த எம்பெருமான்களை (ஸாளக்ராம மூர்த்திகளை) திருமஞ்சன வேதிகையில் எழுந்தருளப்பண்ணி, சுருளமுது (வெற்றிலை, பாக்கு) சோதித்துக் கண்டருளப்பண்ணி, திருவொற்றாடை சாத்தி, ''ஸ்ரீமதே நம: எண்ணெய் ஒலியல் சாத்தியருளவேணும். எண்ணெய்க் காப்பு சாத்தியருளவேணும். திருமுடிக்காப்புக்காக சாத்துப்படி சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, ஸ்நாநீய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து, புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், *வெண்ணெயளைந்த குணுங்கும்* ஆகியவற்றை அநுஸந்தித்துக்கொண்டு, தீர்த்த எம்பெருமான்களுக்குத் திருமஞ்சனம் கண்டருளப் பண்ண வேண்டும். உத்தரணியை சுத்த ஜலத்தில்

பண்ணி, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருமுடி திருமேனியெங்கு மொக்கத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, தீர்த்த எம்பெருமான்களை கோயிலாழ்வாரிலே எழுந்தருளப் பண்ணி,

திருத்துழாய்க் கொழுந்தைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். அலங்காராஸநத்துக்கு எழுந்தருள வேணும். திவ்ய பீதாம்பரம் சாத்தியருள வேணும். உத்தரீயம் சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''அர்க்யம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்தஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே

---

சோதித்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவொற்றாடை சாத்தியருளவேணும்'' என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு தீர்த்த எம்பெருமான்களை முன்பு போலவே கோயிலாழ்வாரில் எழுந்தருளப் பண்ண வேண்டும்.

திருத்துழாய்க் கொழுந்தை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருளவேணும். அலங்காராஸனத்திற்கு எழுந்தருளவேணும். திவ்ய பீதாம்பரம் சாத்தியருளவேணும். உத்தரீயம் சாத்தியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, பிறகு ''அர்க்யம் கண்டருள வேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று மீண்டும் அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவொற்றாடை சாத்தியருளவேணும்''

முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ''திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'', தலைமாறி, ''திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருமண்காப்பு சாத்தியருள வேணும். ஸ்ரீசூர்ணக்காப்பு சாத்தியருள வேணும். திருயஜ்ஞோபவீதம் சாத்தியருள வேணும். சாத்துப்படி சாத்தியருளவேணும்'' என்று *கந்தத்வாராந்*, *பூசும் சாந்து* இத்யாதி அநுஸந்தாநத்துடனே சாத்துப்படி சாத்தி, ''திருப்படித்தாமம் சாத்தியருள வேணும்'' என்று, *ஸ்புரத் கிரீடாங்கத ஹார கண்டிகா*, *ஸ்வோசித விவித*,

---

என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பித்து, திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளில் ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருமண்காப்பு சாத்தியருளவேணும். ஸ்ரீசூர்ணக்காப்பு சாத்தியருளவேணும். திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும்.'' என்று விண்ணப்பம் செய்ய வேண்டும். பிறகு,

''கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம்
ஈச்வரீம் ஸர்வபூதாநாம் த்வாமிஹோப ஹ்வயே ச்ரியம்'',

''பூசும் சாந்து என்னெஞ்சமே புனையும் கண்ணி எனதுடைய
வாசகம் செய் மாலையே வான்பட்டாடையும் அஃதே
தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே
ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே'' முதலியவைகளை

அநுஸந்தித்துக் கொண்டே சாத்துப்படி சாத்த வேண்டும். ''திருப்படித்தாமம் சாத்தியருள வேணும்'' என்று விண்ணப்பித்து

''ஸ்புரத்கிரீடாங்கத ஹார கண்டிகா மணீந்த்ர காஞ்சீகுண நூபுராதிபி:
ரதாங்க சங்காஸி கதா தநுர்வரை: லஸத்துலஸ்யா வநமாலயோஜ்வலம்'',

''ஸ்வோசித விவித விசித்ராநந்த ஆச்சர்ய நித்ய நிரவத்ய நிரதிசயஸுகந்த நிரதிசயஸுகஸ்பர்ச நிரதிசய ஔஜ்வல்ய கிரீட மகுட சூடாவதம்ஸ மகரகுண்டல க்ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாம உதரபந்தன பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்யபூஷண'',

''மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்தானைக்
கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான், திங்கள்
சடையேற வைத்தானும் தாமரைமேலானும்
குடையேறத்தாம் குவித்துக்கொண்டு'',

''சூட்டுநன் மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீ
ராட்டி அந் தூபம் தரா நிற்கவே யங்கு, ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்று வன்கூன்
கோட்டிடையாடினை கூத்து அடலாயர்தம் கொம்பினுக்கே''

**"கிரீடாதி நூபுராந்தமான திவ்யாபரணங்களையும், சங்கசக்ராத்யாயுதங்களையும் சாத்தியருளவேணும். திருமாலை சாத்தியருளவேணும். திருக்கண்ணாடி கண்டருள வேணும்" என்று திருத்துழாய்க் கொழுந்தாலே கண்டருளப்பண்ணி, *பரிவதிலீசனைப் பாடி*, இத்யாதி அநுஸந்தானத்துடனே தூபம் கண்டருளப் பண்ணி, *வையம் தகளியா*, *அன்பே தகளியா*, *திருக்கண்டேன்*, *வடிக்கோல வாள்நெடுங்கண்*, இத்யாதி அநுஸந்தானத்துடனே "தீபம் கண்டருள வேணும். கந்த, புஷ்ப, தூப, தீப, ந்ருத்த, கீத, வாத்ய, சத்ர, சாமர, தாலவ்ருந்தாதி ஸர்வோபசாரங்களையும் கண்டருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து, திருப்பல்லாண்டு, திருப்பாவை விண்ணப்பம் செய்வது.**

**மீளவும் பஞ்ச பாத்ரங்களையும் சோதித்து, திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து, "ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும்.**

---

அநுஸந்தித்து, "கிரீடாதி நூபுராந்தமான திவ்யாபரணங்களையும் சங்கசக்ராதி ஆயுதங்களையும் சாத்தியருளவேணும். திருமாலை சாத்தியருளவேணும். திருக்கண்ணாடி கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருத்துழாய்க் கொழுந்தாலே கண்டருளப் பண்ண வேண்டும். பிறகு,

"பரிவதிலீசனைப் பாடி விரிவது மேவலுறுவீர்,
பிரிவகையின்றி நன்னீர் தூய்ப் புரிவதுவும் புகை பூவே" என்றனுஸந்தித்து தூபமும்,

"வையந்தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று".

"அன்பேதகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தையிடுதிரியா - நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்".

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பாலின்று".

"வடிக்கோல வாள்நெடுங்கண் மாமலராள் செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னாள் - அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னும் நலம்புரிந்ததென்கொலோ
கோலத்தாலில்லை குறை" முதலியவற்றை அநுஸந்தித்துக் கொண்டு "தீபம் கண்டருளவேணும். கந்த, புஷ்ப, தூப, தீப, ந்ருத்த, கீத, வாத்ய, சத்ர, சாமர, தால வ்ருந்தாதி ஸர்வோபசாரங்களையும் கண்டருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து தீபமும் வேண்டும். (பிறகு மந்த்ரபுஷ்பம்.) பிறகு திருப்பல்லாண்டு, திருப்பாவை ஸேவிக்க வேண்டும்.

மீண்டும் வட்டில்களை சோதித்து, திருத்துழாக் கொழுந்தை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பித்து, "ஸ்ரீமதே நம: திருவடி நிலைசாத்தியருளவேணும். போஜ்யாஸநத்திற்கு எழுந்தருள

திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். போஜ்யாஸநத்துக்கு எழுந்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, '''ஸ்ரீமதே நம: திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''ஆசமனம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் தலைமாறி, திருவடிகளுக்கும் திருவொற்றாடை சாத்தி,

திருமுன்பே ஸ்தல சுத்தி பண்ணித் திருப்போனகம் ஸமர்ப்பித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்துத் திருப்போனகத்தை உத்தர வாக்யத்தாலே ப்ரோக்ஷித்து, பரிசேஷனம் பண்ணி, ஆபோசனம் ஸமர்ப்பித்து, த்வயத்தாலே அபிமந்த்ரித்து, இரண்டு கூறாக பாவித்து, அதில் ஒருபாகம் எம்பெருமான்களுக்கும் மற்றொருபாகம் பிராட்டிமார்களுக்குமாக பாவித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து இடது கையிலே வைத்துக்கொண்டு, திருப்போனகத்தை ஆசார்யன் ஆமலகப்ரமாணம் எம்பெருமான்

---

ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடி நிலைசாத்தியருளவேணும். போஜ்யாஸநத்திற்கு எழுந்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, ''ஸ்ரீமதே நம: திருவடிகள் விளக்கியருளவேணும்'' என்று பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ''திருவொற்றாடை சாத்தியருள வேணும்'' என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும், தலைமாறி மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடை ஸமர்ப்பிக்க வேண்டும்.

எம்பெருமான் திருமுன்பே ஸ்தலத்தை சுத்தி செய்து அங்கே திருப்போனகத்தை (பிரசாதங்களை - அதாவது அன்னம், திருக்கண்ணமுது, திருப்பணியாரங்கள், பருப்பு, கறியமுது, நெழுகறியமுது (குழம்பு), சாற்றமுது, தயிரமுது, நெய்யமுது முதலியவை) வைத்து, அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து, திருப்போனகத்தை ''ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்ற உத்தர வாக்கியத்தால் ப்ரோக்ஷித்து, தீர்த்தத்தால் சுற்றி வளைத்து, திருத்துழாய்க் கொழுந்தை அவற்றில் பரிமாறி, ''ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:'' என்ற த்வயத்தால் அவற்றை அபிமந்த்ரித்து, அவற்றை இரண்டுபாகமாகப் பிரித்து, ஒருபாகத்தை எம்பெருமான்களுக்கும், மற்றொரு பாகத்தை பிராட்டிமார்க்குமாக பாவித்து, அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து இடது கையில் வைத்துக் கொண்டு, திருப்போனகத்தை நெல்லிக்காயளவு ஆசார்யன் எடுத்து எம்பெருமானுடைய வலது திருக்கரத்தில் ஸமர்ப்பிப்பதாகவும்,

**உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பானீய பாத்ரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை எடுத்து பானீயம் கண்டருளப் பண்ணி, *நாறுநறும்பொழில்*, *இன்றுவந்தித்தனையும்*, *பச்சைமாமலைபோல் மேனி*, *மிக்கானை மறையாய்*, *அடியேன் மேவி*, அன்னஸூக்தம், மதுஸூக்தம், *யாப்ரீதிர் விதுரார்ப்பிதே*, *பிப்ரத் வேணும்* இத்யாதி அநுஸந்தானத்துடனே திருப்போனகம் கண்டருளப்**

---

அர்க்ய வட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து. ''ஸ்ரீமதே நம: பானீயம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பித்து பானீயம் கண்டருளப் பண்ண வேண்டும். பிறகு

நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்
நூறுதடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங்கொலோ.

இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில் நான்
ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்
தென்றல்மணம்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே.

பச்சைமாமலைபோல்மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சவை தவிர யான்போய் இந்திரலோகமாளும்
அச்சுவை பெறினும்வேண்டேன் அரங்கமாநகருள்ளானே.

மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன் மலையை
தக்கானைக் கடிகைத்தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே.

அடியேன் மேவியமர்கின்ற வமுதே இமையோரதிபதியே
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்கனிவாய்ப் பெருமானே
செடியார் வினைகள் தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே
நொடியார்பொழுதும் உனபாதம் காண நோலாதாற்றேனே. என்கிற பாசுரங்களையும்,

அஹமஸ்மி ப்ரதமஜாருதஸ்ய | பூர்வம் தேவேப்யோ அம்ருதஸ்ய நாபி: |
யோமாததாதி ஸயிதேவமாவா: | அஹமந்நமந்நமதந்தமத்மி |
பூர்வமக்நே ரபிதஹத்யந்நம் | யத்தௌ ஹாஸாதே அஹமுத்தரேஷு |
வ்யாத்தமஸ்ய பசவஸ்ஸூஜம்பம் | பச்யந்தி தீரா: ப்ரசரந்தி பாகா: |
ஜஹாம்யந்நம் ந ஜஹாம்யந்நம் | அஹமந்நம் வசமிச்சராமி |
ஸமாநமர்த்ததம் பர்யேமி புஞ்ஜத் | கோமாமந்நம் மநுஷ்யோதயேத |
பாரகே அந்நம் நிஹிதம் லோக ஏதக் | விச்வைர்தேவை: பித்ருபி குப்தமந்நம் |
யதத்யதே லுப்யதே யத் ப்ரோப்யதே | சததமீ ஸாதநூர்மே பபூவ |
மஹாந்தௌ சரூஸக்ருத்துக்தேந பப்ரௌ |திவஞ்ச ப்ருச்ஞி ப்ருதிவீஞ்ச ஸாகம் |
தத்ஸம் பிபந்தோ நமிநந்தி வேதஸ: | நைதத் பூயோ பவதி நோகநீய: |

*பிப்ரத் வேணும்* இத்யாதி அநுஸந்தானத்துடனே திருப்போனகம் கண்டருளப் பண்ணி, பானீயம் கண்டருளப் பண்ணி, பிராட்டிமார்களுக்கும் யதாபாகமாகக் கண்டருளப் பண்ணி, பானீயம் கண்டருளப் பண்ணி, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து, ''ஸ்ரீமதே நம: திருப்பவளம் மாற்றியருள வேணும். திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே

---

தத்ஸம் பிபந்தோ நமிநந்தி வேதஸ: I நைதத் பூயோ பவதி நோகநீய: I
அந்நம் ப்ராணம் அந்நமபாநமாஹு: I அந்நம் ம்ருத்யும் தமுஜீவாது மாஹு: I
அந்நம் ப்ரம்மாணோஜரஸம் வதந்தி I அந்நமாஹு: ப்ரஜநநம் ப்ரஜாநாம் I
மோகமந்நம் விந்ததே அப்ரசேதா: I ஸத்யம் ப்ரவீமி வதயித் ஸதஸ்ய I
நார்யமணம் புஷ்யதி நோ ஸகாயம் I கேவலாகோ பவதி கேவலாதீ I
அஹம் மேகஸ்தநயந் வர்ஷந்நஸ்மி I மாமதந்த்யஹமத்ம்யந்யாந் I
அஹ(கு)ம் ஸதம்ருதோ பவாமி I மதாதித்யா அதிஸர்வேதபந்தி II

என்கிற அன்ன ஸூக்தத்தையும்.

மதுவாதாருதாயதே மதுக்ஷரந்தி ஸிந்தவ: I மாத்வீர்நஸ்ஸந்த்வோஷதீ: I
மதுநக்தமுதோஷஸி மதுமத்பார்த்திவ(கு)ம் ரஜ: I மதுத்யௌரஸ்துந:பிதா I
மதுமாந்நோ வாநஸ்பதிர் மதுமா(கு)ம் அஸ்து ஸூர்ய: I மாத்வீர்காவோ பவந்துந: II

என்கிற மதுஸூக்தத்தையும்

யாப்ரீதிர் விதுரார்ப்பிதே முரரிபோ குந்த்யர்ப்பிதே யாத்ருசீயா
கோவர்தந மூர்த்னி யாச ப்ருதுகே யசோதரார்பிதே
பாரத்வாஜ ஸமர்ப்பிதே ஸபரிகாதத்தேதரே யோஷிதாம்
யாப்ரீதிர் முநிபத்நி பக்திரசிதேப்யத்தரார்பிதாம் குரு.

பிப்ரத் வேணும் ஜடரபடரயோ: ச்ருங்கவேத்ரேச கக்ஷே
வாமே பாணௌ மஸ்ருணகபலம் தத்பலாந்யங்குலீஷு
திஷ்டந்மத்யே ஸ்வபரிஸுஹ்ருதோ ஹாஸயந்நர்மபிஸ்வை:
ஸ்வர்கே லோகே மிஷதிதி புபஜே யஜ்ஞபுக் பால கேளீம்.

முதலிய சுலோகங்களையும் அநுஸந்தித்துக்கொண்டு, எம்பெருமானுக்குத் திருப்போனகம் கண்டருளப் பண்ண வேண்டும். (வலது கையின் ஐந்து விரல்களையும் ஒன்று சேர்த்து (க்ராஸமுத்திரையால்) ப்ரஸாதத்தை ஒவ்வொரு மூர்த்திக்கும் மும்மூன்று தரம் ''ஸ்ரீமதே நாராயணாய (திருவாராதனப் பெருமாள் கண்ணபிரானாக இருந்தால் க்ருஷ்ணாய என்றும் ராமபிரானாக இருந்தால் ராமாய என்றும் இதே போல் மற்ற எம்பெருமான்களுக்கும் சொல்லி) ''திருப்போனகம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பித்து, பெருமாள் திருக்கையில் ஸமர்ப்பிப்பதாகவும், அவர் திருப்பவளத்திலிட்டு அமுது செய்வதாகவும் பாவித்து, பிறகு அர்க்ய வட்டிலிலிருந்து பானீயம் கண்டருளப் பண்ணவேண்டும். பிறகு பிராட்டிமார்க்கும் இதேபோல் திருப்போனகம் கண்டருளப்பண்ணி, பானீயம் கண்டருளப்பண்ண வேண்டும். சுத்த ஜலத்தில் உத்தரணியை சோதித்த பிறகு, ''ஸ்ரீமதே நம: திருப்பவளம் மாற்றியருள வேணும். திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து,

செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் தீர்த்தத்தை எடுத்து, ‘‘திருக்கைகள் விளக்கியருளவேணும்’’ என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ‘‘ஆசமனம் கண்டருள வேணும்’’ என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை ஒருதலையாலே ‘‘திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றாடை சாத்தியருள வேணும்’’, தலைமாறி, ‘‘திருவடிகளுக்குத் திருவொற்றாடை சாத்தியருள வேணும்’’ என்று விண்ணப்பம் செய்து,

‘‘ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம: அநந்தாய நாகராஜாய நம: வைநதேயாய பக்ஷிராஜாய நம: ஸுதர்சனாய ஹேதிராஜாய நம: பாஞ்சஜந்யாய சங்காதிபதயே நம: திருப்போனகம் யதா பாகமாகக் கண்டருள வேணும்’’ என்று விண்ணப்பம் செய்து, பானீயம் கண்டருளப்பண்ணி, திருவொற்றாடை சாத்தி,

‘‘ஸ்ரீமத்ப்ய: பராங்குச பரகாலாதிப்யோ நம:’’ என்று திருப்போனகம் யதாபாகமாகக் கண்டருளப் பண்ணி, பாநீயம் கண்டருளப்ப பண்ணி,

‘‘ஸ்ரீமதே ராமாநுஜாய நம:’’ என்று உடையவருக்கு திருப்போனகம் கண்டருளப் பண்ணி, அநந்விசை ஆசார்யனுக்கும் கண்டருளப் பண்ணி,

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து, தீர்த்தம் பூரித்து, அபிமந்த்ரித்து, சோஷித்து, திருத்துழாயைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து ‘‘ஸ்ரீமதே நம: திருவடி

---

சோதித்து, ‘‘திருக்கைகள் விளக்கியருளவேணும்’’ என்று மீண்டும் அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ‘‘ஆசமனம் கண்டருள வேணும்’’ என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ‘‘திருவொற்றாடை சாத்தியருளவேணும்’’ என்று திருவொற்றாடையின் ஒருநுனியால் திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், மற்றொரு நுனியால் திருவடிகளுக்கும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு, ‘‘ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம: அநந்தாய நாகராஜாய நம: வைநதேயாய பக்ஷிராஜாய நம: ஸுதர்சனாய ஹேதிராஜாய நம: பாஞ்சஜந்யாய சங்காதிபதயே நம: திருப்போனகம் யதாபாகமாகக் கண்டருளவேணும்’’ என்று விண்ணப்பித்து அவர்களுக்குத் திருப்போனகம் கண்டருளப்பண்ணி, பானீயமும் கண்டருளப்பண்ணி திருவொற்றாடை சாத்த வேண்டும்.

‘‘ஸ்ரீமத்ப்ய: பராங்குச பரகாலாதிப்யோ நம: திருப்போனகம் யதாபாகமாகக் கண்டருள வேணும்’’ என்று அவர்களுக்கும் கண்டருளப்பண்ணி, பானீயமும் திருவொற்றாடையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

‘‘ஸ்ரீமதே ராமாநுஜாய நம:’’ என்று உடையவருக்கும் போனகம் கண்டருளப்பண்ணி, பிறகு ஆசார்யனுக்கும் கண்டருளப்பண்ண வேண்டும்.

மீண்டும் ஐந்து வட்டில்களையும் சோதித்து, தீர்த்தம் நிறைத்து, அபிமந்த்ரித்து, திருத்துழயை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பித்து, ‘‘ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருளவேணும்.

சோஷித்து, திருத்துழாயைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''அர்க்யம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து ''பாத்யம் கண்டருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை சாத்தி,

சுருளமுது சோதித்து, *கனஸார* என்கிற ச்லோகாநுஸந்தானத்துடனே சுருளமுது கண்டருளப் பண்ணி, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் தீர்த்தத்தை எடுத்துத் திருப்பவளம் மாற்றி, ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ஆசமனம் கண்டருளப்பண்ணி திருப்படிகத்திலே சேர்த்து, திருவொற்றாடை சாத்தி, கற்பூர நீராஜநம் *லக்ஷ்மீசரணலாக்ஷாங்க* இத்யாதி ச்லோகாநுஸந்தானத்துடனே

---

எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பித்து. ''ஸ்ரீமதே நம: திருவடி நிலை சாத்தியருளவேணும். மந்த்ராஸநத்துக்கு எழுந்தருள வேணும்.'' என்று விண்ணப்பம் செய்து. 'அர்க்யம் கண்டருள வேணும்' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து. உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து. 'பாத்யம் கண்டருள வேணும்' என்று பாத்யம் ஸமர்ப்பித்து. உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து. 'திருக்கைகள் விளக்கி யருளவேணும்' என்று மீண்டும் அர்க்யம் ஸமர்ப்பித்து. உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து. 'ஆசமனம் கண்டருள வேணும்' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து. உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து. திருவொற்றாடையும் சாத்தி.

''கனஸாரஸிரோதக்ரை: க்ரமுகாஷ்டதளைஸ்ஸஹ
விமலாசநிதாம்பூல தளாநி ஸ்வீகுருப்ரபோ''

என்ற சுலோகத்தை அநுஸந்தித்துக் கொண்டு சுருளமுது (வெற்றிலை பாக்கு) சோதித்துக் கண்டருளப்பண்ணவேண்டும். பிறகு அர்க்யவட்டிலிலிருந்து தீர்த்தத்தை எடுத்து. திருப்பவளம் மாற்றி. ''திருக்கைகள் விளக்கியருளவேணும்'' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து. ஆசமனம் கண்டருளப் பண்ணி. திருவொற்றாடை சாத்தி கற்பூர நீராஜனம் ஸமர்ப்பித்து. பின்வரும் சுலோகங்களை அநுஸந்திக்க வேண்டும்:

லக்ஷ்மீசரண லாக்ஷாங்க ஸாக்ஷி ஸ்ரீவத்ஸ வக்ஷஸே
க்ஷேமங்கராய ஸர்வேஷாம் ஸ்ரீரங்கேசாய மங்களம்.

ச்ரிய:காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநாம்.

திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''திருவடி நிலை சாத்தியருள வேணும். பர்யங்காஸநத்துக்கு எழுந்தருள வேணும்.'' என்று விண்ணப்பம் செய்து, பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஸ்ரீமதே நம: திருவடிகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''திருக்கைகள் விளக்கியருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, ''ஆசமனம் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை சாத்தி, சுருளமுது திருத்திக் கண்டருளப் பண்ணி, திருப்பவளம் மாற்றித் திருக்கைகள் விளக்கி, ஆசமனம்

---

அஸ்துஸ்ரீஸ்தந கஸ்தூரீ வாஸநாவாஸிதோரஸே
ஸ்ரீஹஸ்திகிரிநாதாய தேவராஜாய மங்களம்.

கமலாகுச கஸ்தூரீ கர்தமாங்கித வக்ஷஸே
யாதவாத்ரி நிவாஸாய ஸம்பத்புத்ராய மங்களம்

ஸ்ரீமத்யை விஷ்ணுசித்தார்ய மநோ நந்தந ஹேதவே
நந்தநந்தந ஸுந்தர்யை கோதாயை நித்ய மங்களம்

ஸ்ரீநகர்யாம் மஹாபுர்யாம் தாம்ரபர்ண்யுத்தரேதடே
ஸ்ரீதிந்த்ரிணீமூலதாம்நே சடகோபாய மங்களம்

ஸ்ரீமதாலிஸ்ரீநகரி நாதாய கலிவைரிணே
சதுஷ்கவிப்ரதாநாய பரகாலாய மங்களம்

ஸ்ரீமந்மஹாபூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந:
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம்

(ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முநீந்த்ராய மஹாமத்மநே
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர்நித்ய மங்களம்)

மங்களாசாஸநபரைர் மதாசார்ய புரோகமை:
ஸர்வைச்சபூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம்

பிறகு திருப்பாவை முதலிய திவ்யப்பிரபந்தங்களின் சாற்றுமுறைப் பாசுரங்களை ஸேவிக்க வேண்டும். பிறகு எம்பெருமான் திவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஸ்ரீமதே நம: திருவடிநிலை சாத்தியருளவேணும். பர்யங்காஸநத்துக்கு எழுந்தருளவேணும்'' என்று விண்ணப்பிக்க வேண்டும். பிறகு 'ஸ்ரீமதே நம: திருவடிகள் விளக்கியருளவேணும்' என்று பாத்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, 'திருக்கைகள் விளக்கியருளவேணும்' என்று அர்க்யம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, 'ஆசமநம் கண்டருளவேணும்' என்று ஆசமனம் ஸமர்ப்பித்து, உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, திருவொற்றாடையும், சுருளமுதும் கண்டருளப்பண்ணி, திருப்பவளம் மாற்றி, திருக்கைகள் விளக்கி, ஆசமனம் கண்டருளப்பண்ணி,

சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றாடை சாத்தி, சுருளமுது திருத்திக் கண்டருளப் பண்ணி, திருப்பவளம் மாற்றித் திருக்கைகள் விளக்கி, ஆசமனம் கண்டருளப் பண்ணி, திருவொற்றாடை சாத்தி, திருவடிகளில் திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து, ''ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங்களையும் கண்டருள வேணும்'' என்று விண்ணபபம் செய்து, *உபசாராபதேசேந* என்கிற ச்லோக அநுஸந்தானத்துடனே தண்டன் ஸமர்ப்பித்து, அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டு, *பந்நகாதீச பர்யங்கே ரமாஹஸ்தோபதாநகே* என்கிற ச்லோகத்தையும், *அரவத்தமளியினோடும்*, *உறகலுறகலுறகல்* என்கிற பாசுரங்களையும் அநுஸந்தித்துக் கோயிலாழ்வார் திருக்காப்புச் சேர்த்து, திருமஞ்சனத் தாழியைப் பாநீயார்த்தமாக ஸந்நிதியிலே ஸ்தாபித்து, *ஜிதந்தே* என்கிற ஸ்தோத்ர அநுஸந்தானத்துடன் தண்டன் ஸமர்ப்பித்து அபராதக்ஷாமணம் பண்ணிக் கொள்வது.

---

ஜீயர் திருவடிகளே சரணம்

சுருளமுதும் கண்டருளப்பண்ணி, திருப்பவளம் மாற்றி, திருக்கைகள் விளக்கி, ஆசமனம் கண்டருளப்பண்ணி, திருவொற்றாடை சாத்தி, திருத்துழாய்க் கொழுந்தைத் திருவடிகளில் ஸமர்ப்பித்து, ''ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்து,

உபசாராபதேசேந க்ருதாந் அஹரஹர்மயா
அபசாராநிமாந் ஸர்வாந் க்ஷமஸ்வ புருஷோத்தம

என்ற ச்லோகத்தை அநுஸந்தித்து, தண்டன் ஸமர்ப்பித்து அபராதக்ஷாமணம் பண்ணிக் கொள்ள வேண்டும். பிறகு

பந்நகாதீசாய பர்யங்கே ரமா ஹஸ்தோபதாநகே
ஸுகம் சேஷ்வ வருஷாதீச ஸுதர்சந ஸுரக்ஷிதம்
சங்கசக்ரகதாமுக்ய திவ்யாயுதகணஸ் ததா
ஸ்ரீச ரக்ஷாபிதாநாய ஸர்வா ஜாக்ரத ஜாக்ரத என்ற சுலோகத்தையும்

அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து
பரவைத்திரை பலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானைப்
பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினங்காவல்பொருட்டே.

உறகல் உறகல் உறகல் ஒண்சுடராழியே சங்கே
அறவெறிநாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே
இறவுபடாமலிருந்த எண்மர் உலோகபாலீர்காள்
பறவையரையா உறகல் பள்ளியறை குறிக்கொண்மின்.

என்கிற பாசுரங்களையும் அநுஸந்திக்க வேண்டும். திருமஞ்சனத் தாழியில் பானீயார்த்தமாகத் தீர்த்தத்தைக் கோயிலாழ்வார் முன்பு வைக்க வேண்டும். பிறகு ''ஜிதம் தே புண்டரீகாக்ஷ'' என்ற ஸ்தோத்ரத்தை அநுஸந்தித்துக்கொண்டு தண்டம் ஸமர்ப்பித்து, அபராதக்ஷாமணம் பண்ணிக் கொண்டு, கோயிலாழ்வார் திருக்காப்புகளைச் சாத்திவிடவேண்டும்.

ஜீயர் திருவடிகளே சரணம்